# ஆன்சரிங் இஸ்லாம் - தமிழ்

கிறிஸ்தவனுக்கும் முஸ்லீமுக்கும் இடையே உரையாடல்

ஆன்சரிங் இஸ்லாம் தமிழ் தளத்தின்

இமெயில் உரையாடல்களின் தொகுப்பு

## Contents

# 1. உண்மையைச் சொல்வது, வெறுப்புணர்ச்சியை தூண்டுவதாகுமா?

**தேதி:** டிசம்பர் 4, 2004

**தலைப்பு:** வெறுப்பு

அன்பான "ஆன்சரிங் இஸ்லாம் தளகுழுவினரே", உங்கள் தளம் இஸ்லாமியர்களுக்கு எதிராக வெறுப்புணர்ச்சியை தூண்டக்கூடியதாக தெரிகிறது. ஏன் நீங்கள் இஸ்லாமுக்கும் கிறிஸ்தவத்திற்கும் இடையே இருக்கும் பொதுவான விவரங்கள் பற்றி எழுதக்கூடாது, அதாவது ஓர் இறைக்கொள்கையைப் பற்றி இன்னும் பொதுவான விவரங்கள் பற்றி எழுதலாமே. உங்களுக்கு ஒரு அமைதியான உலகம் தேவையானால், எங்களுடன் சகோதர அன்பில் கைகளைக் கோர்த்துக்கொள்ளுங்கள் மற்றும் இஸ்லாம் பற்றியவெறுப்புணர்ச்சி என்ற தீயை பரப்புவதை நிறுத்திக்கொள்ளுங்கள்.

**நம்முடைய பதில்:**

உங்களுக்கு எங்கள் வாழ்த்துக்கள்.

உங்கள் மனவேதனையை தெரிவிக்க நேரம் ஒதுக்கியமைக்காக உங்களுக்கு எங்கள் நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம். ஆன்சரிங் இஸ்லாம் தளத்தின் ஆசிரியர்களின் ஒரு நபராக நான் என் கருத்தைச் சொல்கிறேன், அதாவது இந்த தளத்தில் எழுதும் அனைவரும் இஸ்லாமிய மக்களாகிய உங்கள் மீது தூயஅன்பும் அக்கறையும் கொண்டுள்ளவர்கள் என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன். நானும் என் மனைவியும் எங்கள் வாழ்க்கையின் பெரும்பான்மையான காலம், அதாவது 23 ஆண்டுகளை 98 சதவிகிதத்திற்கும் அதிகமான இஸ்லாமியர்கள் வாழும் பட்டணத்தில் கழித்துள்ளோம். எங்களுக்கு நூற்றுக்கணக்கான இஸ்லாமிய நண்பர்கள் இருக்கிறார்கள். அதிகமாக நண்பர்கள் இருக்கிறார்கள் என்பதால், நாங்கள் ஒன்றாக உட்கார்ந்துக்கொண்டு, கைகோர்த்துக்கொண்டு, ஒருவரை ஒருவர் விசாரித்துக்கொண்டு, எங்களுக்கு இடையே இருக்கும் பொதுவான விவரங்களை மட்டும் பேசிக்கொண்டு இருந்தோம் என்று பொருள் அல்ல. இல்லை, நாங்கள் வீணாக காலம் கழிக்க பொதுவானவைகளை மட்டும் பேசுவதில்லை. நாங்கள் எங்கள் இஸ்லாமிய நண்பர்களை நேசிக்கிறோம், அதனால், தேவனுடைய வசனங்களை அவர்களிடம் பகிர்ந்துக்கொள்கிறோம். ஒரு வேளை, அவர்களின் சிறுவயது முதல் அவர்களுக்கு போதிக்கப்பட்டவைகளுக்கு எதிராக இருந்தாலும் சரி, சத்தியத்தை அவர்களிடம் பகிர்ந்துக்கொள்கிறோம். சத்திய வேதம் கூறுகிறது *"மறைவான சிநேகத்தைப் பார்க்கிலும், வெளிப்படையான கடிந்துக்கொள்ளுதல் நல்லது" (நீதிமொழிகள் 27:5) மற்றும் "பரியாசக்காரனை கடிந்துக்கொள்ளாதே, அவன் உன்னைப் பகைப்பான்; ஞானமுள்ளவனைக் கடிந்துக்கொள், அவன் உன்னை நேசிப்பான்"* (நீதிமொழிகள் 9:8)

நம்மில் ஒவ்வொருவரும், "வெறுப்புணர்ச்சியை பரப்புவது" மற்றும் "உண்மை அன்புடன் சத்தியத்தை சொல்லுவது" (எபேசியர் 4:15) என்பவைகளுக்கு இடையே இருக்கும் வித்தியாசம் என்ன என்பதை

பகுத்தறிய கற்றுக் கொள்ளவேண்டும். கண்பார்வை இல்லாத ஒரு மனிதன், ஒரு ஆபத்தான இடத்தில் நடந்துச் சென்றுக்கொண்டு இருக்கிறார் என்பதைக் காணும் போது, அவரை எச்சரித்து சரியான வழியைக் காட்டுவது "வெறுப்புணர்ச்சி" ஆகுமா அல்லது "அன்புடன் எச்சரிப்பது ஆகுமா?" சொல்லுங்கள்.

சாலொமோன் நபி இவ்விதமாக கூறுகிறார்: **"மனுஷனுக்குச் செம்மையாகத் தோன்றுகிற வழி உண்டு; அதன் முடிவோ மரண வழிகள்"** (நீதிமொழிகள் 14:12). இப்படி எச்சரிக்கும் வார்த்தைகளை நீங்கள் "வெறுப்புணர்ச்சியை தூண்டும்" வார்த்தைகள் என்பீர்களா அல்லது அக்கறையுள்ள வார்த்தைகள் என்பீர்களா?

மஸிஹா இயேசு கூறுகிறார்: **"... நான் முந்தினவரும் பிந்தினவரும், உயிருள்ளவருமாய் இருக்கிறேன்; மரித்தேன், ஆனாலும், இதோ சதாகாலங்களிலும் உயிரோடு இருக்கிறேன், ஆமென்; நான் மரணத்திற்கும் பாதாளத்திற்கும் உரிய திறவுகோல்களை உடையவராய் இருக்கிறேன். நான் நேசிக்கிறவர்கள் எவர்களோ அவர்களைக் கடிந்துகொண்டு சிட்சிக்கிறேன்; ஆகையால் நீ ஜாக்கிரதையாய் இருந்து மனந்திரும்பு"** (வெளிப்படுத்தின விசேஷம் 1:17-18; 3:19).

மேற்கண்ட விதமாக இயேசு கடிந்துக்கொண்டு கூறுவதினால், அவர் "வெறுப்புணர்ச்சியை உண்டாக்குகிறார் அல்லது வெறுக்கிறார்" என்று பொருள் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

நீங்கள் இதனை அங்கீகரிப்பீர்கள் என்று நான் நம்புகிறேன்: அதாவது ஒரு நபர் மீது நீங்கள் அக்கறை உள்ளவராக இருந்தால், அவர் துக்கப்படுவார் என்று தெரிந்திருந்தாலும், அவருக்கு நிச்சயமாக உண்மையை கூறுவீர்கள். இப்போது இதனை கவனியுங்கள்...

இஸ்லாமியர்கள் முஹம்மது என்ற ஒரு மனிதர் சொன்னதை மட்டுமே நம்புகிறார்கள். ஆனால், ஆன்சரிங் இஸ்லாம் தளத்தில் கட்டுரை எழுதுபவர்கள் அனைவரும், பாதுகாக்கப்பட்ட பரிசுத்த வேதமாகிய பைபிளை நம்புகிறார்கள், பைபிளில் நாற்பதுக்கும் அதிகமான தீர்க்கதரிசிகளால் பதிவு செய்யப்பட்ட வார்த்தைகள் உள்ளன, மற்றும் அவைகளை அப்போஸ்தலர்கள் கூட அங்கீகரித்துள்ளனர். ஆறு நூறு ஆண்டுகளுக்கு முன்பு தீர்க்கதரிசிகள் கூறிய அனைத்து தீர்க்கதரிசனங்களையும், இயேசுவாகிய மேசியாவினால் நிறைவேறியது. ஆனால், முஹம்மது ஒரு புதிய செய்தியைக் கொண்டுவந்தார். இறைவனின் உண்மையான வேதம் பைபிள் தான் என்றும், குர்ஆன் உண்மையான வேதம் இல்லை என்றும் நாங்கள் 100 சதவிகிதம் நம்புகிறவர்களாக இருந்தும், இந்த உண்மையை இதர மக்களுக்குச் சொல்ல ஒரு சிறு முயற்சியையும் நாம் எடுக்கவில்லையானால், நாங்கள் எப்படிப்பட்ட துர்பாக்கிய மக்களாக இருப்போம். இதன் மூலமாக உண்மை எது பொய் எது என்று மக்களுக்கு புலப்படுமே.

துரதிஷ்டவசமாக, இஸ்லாமின் செய்திக்கும், பைபிளின் செய்திக்கும் பொதுவாக இருப்பது சொற்ப விவரங்களே! இவ்விரண்டு புத்தகங்களும் இறைவனுக்காக பேசுகின்றன. ஆனால், இரண்டும் அடிப்படியிலேயே ஒன்றுக்கொன்று முரண்படுகின்றன. நம்முடைய வாழ்வு குறுகியது, ஆனால், நித்தியம் என்பது நீண்டது, இதனால், பொய்யான அமைதியை நம்பாமல் இருப்போமாக. நாம் கணக்கு ஒப்புவிக்க ஒரு நாள் சர்வ வல்லவராம் இறைவனின் முன்பு நிற்பதற்கு முன்பாக அவரோடு ஒப்புரவாகி, சமாதானம்

அடைந்தோமா இல்லையா என்பது தான் முக்கியமானது.

இந்த சில எண்ணங்களை உங்களோடு பகிர்ந்துக்கொண்டேன். ஒரு வேளை **ஆன்சரிங் இஸ்லாம் தளத்தில்** பதித்த கட்டுரைகளில் உண்மைக்கு புறம்பான விவரம் இருக்குமானால் அதனை எங்களுக்கு அறியத் தாருங்கள். எங்கள் தளம் கீழ்கண்ட வாக்குறுதியைத் தருகிறது:

If you find any factual mistakes [whether misprints or a false representation of doctrines] on these pages, or things that are worded in an offensive way, contact us, we would like to correct that. See our site policies.

இந்த வாக்குறுதியில் நாங்கள் மிகவும் கவனமாக இருக்கிறோம். எங்கள் தளத்தில் உண்மைக்கு புறம்பான விவரம் இருப்பதாகவோ அல்லது "வெறுப்பை" வளர்க்கும் விதமாக விவரங்கள் இருப்பதாகவோ நீங்கள் கண்டால், அதனை தயவுசெய்து எங்களுக்கு தெரிவியுங்கள். ஆனால், சரியாக குறிப்பிட்டு எழுதுங்கள். அதாவது, எந்த கட்டுரையில் நீங்கள் பொய்யையும், வெறுப்பையும் கண்டீர்கள் என்றும், மற்றும் ஏன் அக்கட்டுரை வெறுப்பானதாக தெரிகிறது என்பதையும் தெளிவாக எழுதுங்கள். இப்படி தெளிவாக நீங்கள் எழுதாத பட்சத்தில், இவர்கள் வெறுப்புணர்ச்சியை பரப்புகிறார்கள் என்ற குற்றச்சாட்டை சொல்வதை நிறுத்தி விடுங்கள் என்று தாழ்மையுடன் வேண்டுகிறோம்.

இதற்கு இடையில், அன்பு என்றால் என்ன என்பதை தேவன் எப்படி கூறுகிறார் என்பதை உங்களுக்கு சுட்டிக்காட்டுகிறேன் (அன்புக்கு நேர் எதிரானது வெறுப்பு ஆகும்):

நான் மனுஷர் பாஷைகளையும் தூதர்பாஷைகளையும் பேசினாலும், அன்பு எனக்கிராவிட்டால், சத்தமிடுகிற வெண்கலம்போலவும், ஓசையிடுகிற கைத்தாளம்போலவும் இருப்பேன். நான் தீர்க்கதரிசன வரத்தை உடையவனாயிருந்து, சகல இரகசியங்களையும், சகல அறிவையும் அறிந்தாலும், மலைகளைப் பேர்க்கத்தக்கதாக சகல விசுவாசமுள்ளவனாயிருந்தாலும், அன்பு எனக்கிராவிட்டால் நான் ஒன்றுமில்லை. எனக்கு உண்டான யாவற்றையும் நான் அன்னதானம்பண்ணினாலும், என் சரீரத்தைச் சுட்டெரிக்கப்படுவதற்குக் கொடுத்தாலும், அன்பு எனக்கிராட்டால் எனக்குப் பிரயோஜனம் ஒன்றுமில்லை. அன்பு நீடிய சாந்தமும் தயவுமுள்ளது; அன்புக்குப் பொறாமையில்லை; அன்பு தன்னைப் புகழாது, இறுமாப்பாயிராது, அயோக்கியமானதைச் செய்யாது, தற்பொழிவை நாடாது, சினமடையாது, தீங்கு நினையாது, அநியாயத்தில் சந்தோஷப்படாமல், சத்தியத்தில் சந்தோஷப்படும். சகலத்தையும் தாங்கும்,
சகலத்தையும் விசுவாசிக்கும், சகலத்தையும் நம்பும், சகலத்தையும் சகிக்கும். அன்பு ஒருக்காலும் ஒழியாது.... (1 கொரிந்தியர் 13ம் அதிகாரம்)

எங்கள் தளம் "அன்பு" என்ற வார்த்தைக்கு தேவன் கொடுத்த விளக்கத்திற்கு பொருந்துகிறதாக இருக்கவேண்டும் என்று விரும்புகிறோம்.

தாழ்மையுடன்
பிராஹிம்

ஆங்கில மூலம்: Does telling the truth equal spreading hatred?

மூலம்: http://www.answering-islam.org/tamil/emails/hatred.html

## 2. சமீபத்திய வெளிப்பாடு (மார்க்கம்) உண்மையான மார்க்கமா?

**தேதி:** 14 மே 2005

**தலைப்பு:** கொலம்பியாவிலிருந்து...

ஹலோ, நான் கொலம்பியாவில் இஸ்லாமியர்கள் மத்தியிலே கிறிஸ்தவ மிஷனரியாக வேலை பார்த்துக்கொண்டு இருக்கிறேன். இஸ்லாமியர்கள் இன்ஜில் மீதும், இயேசுவின் மீதும் நம்பிக்கை கொள்ளாமல் இருப்பதற்கு அவர்கள் சொல்லும் காரணம் என்னவென்றால், "நாங்கள் நம்பிக்கை கொள்ள தேவையில்லை, எங்களுக்கு அவசியமில்லை" என்பதாகும். இஸ்லாமியர்கள் தீர்க்கதரிசிகளை, வேத புத்தகங்களை, அதிகாரத்தில் அமரும் அரசாங்கத்தோடு ஒப்பிட்டு பேசுகிறார்கள். உதாரணத்திற்கு, ஒரு இஸ்லாமியர் இவ்விதமாக கூறுகிறார் “தோரா, ஜபூர், இன்ஜில் மற்றும் குர்ஆன் என்பது நான்கு பரிசுத்த வேதங்களாகும். இந்த நான்கில் முதல் மூன்று கடந்த காலத்திற்கு சம்மந்தப்பட்டது, ஆனால் குர்ஆனோ தற்காலத்திற்கு சம்மந்தப்பட்டது என்கிறார்கள். இது எப்படியென்றால், கடந்த 35 ஆண்டுகளில் கொலம்பியாவில் நான்கு விதமான அரசாங்கங்கள் ஆட்சி செய்துள்ளன. முதலாவதாக, சிஹானௌக் அரசர் ஆட்சி புரிந்தார், அதன் பிறகு அமெரிக்காவின் ஆதரவுடன் லான் நோல் அரசாங்கம் ஆட்சி புரிந்தது அதன் பிறகு, போல் பாட் என்பவர் ஆட்சி புரிந்தார் இப்படி தொடர்ந்து வருகிறது. இதே போலத்தான் தோராவும், ஜபூரும், இன்ஜிலும் இருக்கிறது, அதாவது ஒரு ஆட்சிக்கு பிறகு (வேதத்திற்கு பிறகு) இன்னொரு ஆட்சி வருகிறது. தற்காலத்தில் ஹுன் சென் நம்முடைய கொலம்பியாவின் ஆட்சியாளராக இருக்கிறார், அதனால் அவரது சட்டத்தின் படியே நாம் வாழவேண்டும், இதற்கு முன்பு ஆட்சி செய்தவர்களின் சட்டத்தின் படி நாம் வாழக்கூடாது”. இதே போலத் தான் நாம் அனைவரும் முஹம்மதுவை பின்பற்றவேண்டும், இன்று நம்முடைய சமீபத்திய வேதமாகிய குர்ஆனை பின்பற்றவேண்டும் என்று இஸ்லாமியர்கள் கூறுகிறார்கள். இன்னும் இஸ்லாமியர்கள் ஒரு படி மேலே சென்று, இயேசு மோசேவையும், மோசேயின் சட்டத்தையும் இரத்து செய்துவிட்டார். (அதே போல இஸ்லாம் இயேசுவையும் அவரது போதனைகளையும் இரத்து செய்துவிட்டது என்று கூறுகிறார்கள்). நான் இந்த கேள்விக்கு தளங்களில் பதிலை தேடி கண்டுபிடிக்கவில்லை அதனால் மெயில் அனுப்புகிறேன். உங்களுக்கு என் நன்றி

இப்படிக்கு,

உங்கள் சகோதரன் (T)

---

**எங்கள் பதில்:**

அன்புள்ளபவருக்கு,

கர்த்தரும் இரட்சகருமாகிய இயேசுவின் பெயரில் உங்களுக்கு எங்கள் வாழ்த்துதல்கள்.

இஸ்லாமியர்கள் உங்களிடம் கூறிய வாதத்தில் அடிப்படை தவறு உள்ளது.

உண்மையாகவே, தற்போது ஆட்சி புரியும் அரசாங்கமும் தடையில்லாமல் தொடர்ந்து பல ஆண்டுகள் ஆட்சி புரியப்போவதில்லை. இதன் பொருள் என்னவென்றால், அந்த இஸ்லாமியர்களின் கருத்துப்படி, அடுத்த அரசு எப்போது ஆட்சிக்கு வருமோ, அப்போது இந்த இஸ்லாமியர்கள் குர்ஆனை பின்பற்றுவதையும், இஸ்லாமை பின்பற்றுவதையும் நிறுத்திவிடவேண்டும் மற்றும் முஹம்மதுவிற்கு அடுத்ததாக எந்த மார்க்கம் அல்லது வெளிப்பாடு வந்ததோ அதனை பின்பற்றவேண்டும். (உதாரணத்திற்குச் சொல்லவேண்டுமென்றால், முஹம்மதுவிற்கு அடுத்ததாக வந்த மார்க்கங்கள் மர்மனோனிஸம் அல்லது பஹாயிஸத்தை இஸ்லாமியர்கள் பின் பற்றவேண்டும்).

உண்மையில், கடந்த 35 ஆண்டுகளிலிருந்து 50 ஆண்டுகள் வரை ஐந்து அரசாங்கங்களை நீங்கள் கண்டு இருக்கிறீர்கள் அப்படியானால், இன்னொரு புதிய அரசு வரும் என்று எதிர்பார்க்காமல் நீங்கள் எல்லாரும் மர்மோன்ஸ் என்றுச் சொல்லக்கூடிய மார்க்கத்தவர்களாக ஏற்கனவே மாறியிருக்கவேண்டும்.

இப்படி நாம் சொல்வதினால், இஸ்லாமிய நண்பர்கள் உடனே இஸ்லாமை விட்டுவிட்டு வேறு மார்க்கத்திற்கு மாறமாட்டார்கள் என்று எனக்கு நிச்சயமாகத் தெரியும், இருந்தாலும் ஏன் சொல்கிறேன் என்றால், இஸ்லாமியர்களின் இந்த மாறிக்கொண்டு இருக்கும் அரசு எடுத்துக்காட்டுகள் உபயோகமற்றவை தவறானவை என்பதை அவர்களுக்கு எடுத்துக் காட்டவே இப்படிச் சொன்னேன். ஆகையால், கிறிஸ்தவராகிய நீங்கள் கூட (இந்த மெயிலை எழுதியர்) இஸ்லாமியர்களின் லாஜிக்கின் படி இஸ்லாமியராக மாறவேண்டிய அவசியமில்லை.

முக்கியமான அம்சம் இது தான்: இஸ்லாமுக்கு பிறகு மர்மோனிஸம் மற்றும் பஹாயிஸம் வந்து இருந்தாலும், இஸ்லாமியர்கள் அவைகளை புறந்தள்ளிவிடுவார்கள், ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். ஏனென்றால், இம்மார்க்கங்கள் இறைவனிடமிருந்து வரவில்லை என்று அவர்கள் நம்புகிறார்கள். இஸ்லாமியர்கள் ஜோசப் ஸ்மித் என்பவரையும், பஹாயுல்லாவும் பொய் நபிகள் (தீர்க்கதரிசிகள்) என்று நம்புகிறார்கள்.

இங்கு ஒரு மார்க்கம் “முன்னால் வந்ததா அல்லது அடுத்தபடியாக வந்ததா” என்பது கேள்வியில்லை. ஆனால், முக்கியமான கேள்வி என்னவென்றால்: அந்த நபர் உண்மையாகவே நபியாக இருந்தரா இல்லையா என்பது தான்?

இஸ்லாமியர்கள் ஏன் பஹாயுல்லாவை நபி என்று ஏற்றுக்கொள்வதில்லை? (பஹாயுல்லா என்பவர் சமீப காலத்தில் இஸ்லாமை போல வெளிப்பாட்டை கொடுத்தார். மட்டுமல்ல, அவர் இஸ்லாமியர்கள் போல

குர்ஆனும், பைபிளும் இறைவனிடமிருந்து வந்தது என்று நம்புகிறார். இஸ்லாமியர்கள் எப்படி தோராவும், இன்ஜிலும் இறைவனால் அருளப்பட்டது என்று நம்புகிறார்களோ அது போல, இவர்களும் நம்புகிறார்கள்). பஹாயுல்லா இறைவனிடமிருந்து வந்தவர் என்று ஏன் இஸ்லாமியர்கள் நம்புவதில்லை? ஏனென்றால், இஸ்லாம் இறைவனால் அனுப்புப்பட்ட உண்மையான மார்க்கம் என்று பஹாய் நம்பினாலும், அவரது செய்தி இஸ்லாமுக்கு எதிராக முரண்பட்டு உள்ளது. இதனால் இஸ்லாமியர்கள் பஹாயுல்லாவை நபி என்று நம்புவதில்லை. மட்டுமல்ல, இஸ்லாமியர்கள் பஹாயுல்லாவை இஸ்லாமோடு ஒப்பிட்டு எடை போட்டு அவரை எதிர்க்கிறார்கள். **இதே போலத் தான், கிறிஸ்தவர்களாகிய நாங்கள் முஹம்மதுவை அவருக்கு முன்பாக வந்த வேதத்தின் செய்தியோடு ஒப்புடுகிறோம். அவருக்கு ஒரு உண்மை நபிக்கான தகுதி உண்டா? அவர் முந்தைய வேதம் சொல்லும் நபிக்கான பரிட்சையில் வெற்றி பெறுகிறாரா என்று நாங்கள் சரி பார்க்கிறோம். முஹம்மது இந்த தீர்க்கதரிசி பரிட்சையில் தோற்று போகிறார், ஆகையால் நாங்கள் அவரை நபி என்று நம்புவதில்லை அவரை நிராகரிக்கிறோம். அவர் இறைவனிடமிருந்து வந்த நபியாக இருக்க வாய்ப்பே இல்லை. ஆக, அவர் இயேசுவை மாற்றி அந்த இடத்தில் "தான்" உட்காரமுடியாது அல்லது இயேசுவின் மார்க்கத்தை இரத்து செய்து தன் மார்க்கத்தை நிலை நிறுத்தமுடியாது**.

கடைசியாக, இஸ்லாமியர்கள் அடிக்கடி இவ்விதமாக கூறுவார்கள்: "மோசேயின் செய்தியை யூதர்கள் திருத்திவிட்டதால், இயேசு வந்து அவைகளை சரிப்படுத்தினார் மற்றும் தேவனின் உண்மையான செய்தியை (இஸ்லாமை) கொண்டுவந்தார். அதே போல, கிறிஸ்தவர்கள் இயேசுவின் செய்தியை திருத்திவிட்டதால் அவருடைய போதனையிலிருந்து வழிவிலகி சென்றுவிட்டதால், இறைவன் அவர்களை சரிப்படுத்த முஹம்மதுவை அனுப்பினார்".

இது இஸ்லாமியர்களின் தவறான கருத்தாகும். பழைய ஏற்பாட்டை திருத்தவே நான் வந்தேன் என்று இயேசு ஒரு போதும் கூறவே இல்லை. அவர் பழைய ஏற்பாட்டை நிறைவேற்ற வந்தார். உண்மையில், பைபிளின் ஒரு பாகம் பழைய ஏற்பாடு ஆகும். ஆனால், முஹம்மதுவும், இஸ்லாமும் பைபிளை பக்கத்தில் வைத்துவிட்டார்கள். இனி பைபிள் உபயோகப்படாது என்று அவர்கள் கூறுகிறார்கள். குர்ஆன் பைபிளின் இடத்தை பிடித்துவிட்டது என்று கூறுகிறார்கள்.

பைபிளின் செய்தியும், குர்ஆனின் செய்தியும் ஒன்றல்ல. இஸ்லாம் சொல்லும் செய்தி பைபிள் சொல்லும் செய்தி அல்ல, அது பைபிளுக்கு எதிரானதாகும். பழைய ஏற்பாட்டின் தொடர்ச்சியாக புதிய ஏற்பாடு இருப்பதுபோல, பைபிளின் தொடர்ச்சி குர்ஆன் அல்ல. கிறிஸ்தவத்தின் தொடர்ச்சி இஸ்லாம் அல்ல.

பழைய ஏற்பாட்டின் மற்றும் புதிய ஏற்பாட்டின் முக்கியமான அடிப்படை கோட்பாடுகளோடு குர்ஆன் முரண்படுகிறது.

உதாரணத்திற்கு, தோராவின் படி, பாவ நிவாரணத்திற்கு ஒரு மிருகத்தை பலியிடவேண்டும் என்ற கோட்பாட்டை எடுத்துக்கொள்வோம். பழைய ஏற்பாட்டின் படி பாவ நிவாரணத்திற்கு மிருகத்தை பலியிடுவது முக்கியமானதாகும். இயேசு சிலுவையில் மரித்ததினால் இந்த கோட்பாடு நிறைவேறியது. பழைய ஏற்பாடும், புதிய ஏற்பாடும் இந்த காரியத்தில் ஒன்றோடு ஒன்று கலந்துவிடுகிறது. ஆனால், தோராவில் இப்படிப்பட்ட பலியிடும் கோட்பாடு உள்ளது என்றுகூட குர்ஆனுக்கு தெரியாது. தோரா

பற்றி கூறும் போதும், குர்ஆன் இதைப் பற்றி சொல்வது இல்லை. குர்ஆன் இந்த பாவ நிவாரண பலியை நிராகரிக்கிறது. இஸ்லாமின் படி மனிதன் நல்லவனாக இருக்கிறான் மற்றும் அவனுக்கு இரட்சிப்பு அவசியமில்லை என்று கருதுகிறது.

கிறிஸ்தவத்தோடு ஒப்பிடும் போது, இஸ்லாமிய மதம் தன் செய்தியில் அடிப்படை கோட்பாடுகளிலேயே வித்தியாசப்படுகிறது. இஸ்லாமுக்கு பிறகு வரும் மதங்கள் பொய்யானவை என்று எப்படி இஸ்லாமியர்கள் கூறுகிறார்களோ, அதே போல இஸ்லாம் கூட ஒரு பொய்யான மதமாகும்.

உங்கள் நண்பர் இந்த சத்தியங்களை ஜீரணித்துக்கொள்ளமாட்டார், ஆனால், உங்களுக்கு இவைகள் உதவியாக இருந்திருக்கும் என்று நான் நம்புகிறேன்.

முன்னால் வந்ததா பின்னால் வந்ததா என்பது கேள்வியில்லை, அந்த மார்க்கம் உண்மையாகவே உண்மையான மார்க்கமா என்பது தான்.

உங்கள் இஸ்லாமிய நண்பர்களுடன் நீங்கள் பேசும் போது உங்களுக்கு கர்த்தர் ஞானத்தை அருளுவாராக.

ஜோசன் கர்ட்ஜ்

ஆன்சரிங் இஸ்லாம்

ஆங்கில மூலம்: **Does The Latest Revelation Equal Truth?**

மூலம்: http://www.answering-islam.org/tamil/emails/latest_revelation.html

# 3. கிறிஸ்தவர்கள் "அவர் மீது சாந்தி உண்டாகட்டும் (PBUH)" என்று ஏன் பயன்படுத்தக்கூடாது?

தேதி: 31 மே 2005

**தலைப்பு:** இறைவனின் கடைசி இறைத்தூதரின் பெயரை குறிப்பிடும் போது "அவர் மீது சாந்தி உண்டாகட்டும் (PBUH)" என்று பயன்படுத்துங்கள்?

அன்புள்ள ஐயா,

உங்கள் வாதங்கள் கோர்வையாக உள்ளது ஆனால், அதில் பகுத்தறிவு இல்லை. இறைவனின் கடைசி தூதரின் பெயரை குறிப்பிடும் போது "அவர் மீது சாந்து உண்டாவதாக" என்று நீங்கள்

பயன்படுத்தவேண்டும் என்று உங்களுக்கு இஸ்லாமியனாகிய நான் அறிவுரை கூறுகிறேன். இப்படி பயன்படுத்துவது உங்கள் நம்பிக்கைக்கு (வாதங்களுக்கு) இடையூராக இருக்காது என்று நம்புகிறேன்.

மரியாதையுடன் இப்படிக்கு

Xxxxxxxx

**எங்கள் பதில்:**

உங்களுக்கு எங்கள் வாழ்த்துதல்கள்.

உங்கள் ஈமெயிலுக்காக நன்றி.

எங்களுடைய ஆன்சரிங் இஸ்லாம் கட்டுரைகளில் ஏன் நாங்கள் "அவர் மீது சாந்து உண்டாகட்டும் (PBUH)" என்று பயன்படுத்துவதில்லை என்பதற்கு சில காரணங்கள் உள்ளன.

(குறிப்பு: ஆங்கிலத்தில் "PBUH" என்று கூறினால் "peace be upon him" என்று அர்த்தம். அரபியில் "Salla Allahu Alaihi Wa Sallam (SAW)" என்பார்கள், இதன் பொருள்: "அல்லாஹ்வின் ஜெபங்கள் மற்றும் சாந்தி அவர் மீது இருப்பதாக".)

இவ்விரண்டும் கீழ்கண்ட குர்ஆன் வசனத்தின் அடிப்படையில் உருவாக்கப்பட்டது.

> இந்த நபியின் மீது அல்லாஹ் அருள் புரிகிறான். மலக்குகளும் அவருக்காக அருளைத் தேடுகின்றனர். முஃமின்களே நீங்களும் அவர் மீது ஸலவாத்து சொல்லி அவர் மீது ஸலாமும் சொல்லுங்கள். (குர்ஆன் 33:56)

"அவர் மீது சாந்தி உண்டாகட்டும்" என்று கூறினாலோ அல்லது "ஸல்" என்று கூறினாலோ, முஹம்மது மீது சாந்தியும் ஜெபங்களும் உண்டாவதாக என்று பொருள். இவ்விரண்டில் எதனை நாம் பயன்படுத்தினாலும், அது ஏற்கனவே மரித்து தன் முடிவு நிர்ணயிக்கப்பட்ட ஒரு மனிதன் மீது ஆசீர்வாதத்தை கொடுக்கும் படி வேண்டிக்கொள்வதாக இருக்கிறது. அதே நேரத்தில் எங்கள் வேதம் கீழ்கண்டவாறு கூறுகிறது:

> அன்றியும், ஒரேதரம் மரிப்பதும், பின்பு நியாயத்தீர்ப்படைவதும், மனுஷருக்கு நியமிக்கப்பட்டிருக்கிறபடியே (எபிரேயர் 9:27)

ஆக, ஒரு மனிதன் மரித்துவிட்டால், அந்த நபர் அல்லது சகோதரி, ஒன்று இறைவனிடமிருந்து பிரிக்கப்பட்டு துன்பம் அனுபவித்துக்கொண்டு இருக்கவேண்டும் அல்லது இறைவனுடைய பிரசன்னத்தின் மகிழ்வினால் நிரம்பி சந்தோஷத்தோடு இருக்கவேண்டும். ஆக, மேற்கண்ட இரண்டு நிலைகளில் ஏதாவது ஒரு நிலையில் இருக்கும் ஒரு நபருக்கு, உலகத்தில் உயிரோடு வாழ்பவர்களின் வேண்டுதல்கள் பாதிக்காது (இதனால் எந்த ஒரு உபயோகமும் இல்லை). ஒரு மனிதர் மரித்துவிட்டபிறகு

அவருக்காக வேண்டுதல் செய்வது வீணான செயல் இதனால் உபயோகம் ஒன்றுமில்லை.

இன்னொரு முக்கியமான விவரம் என்னவென்றால், முஹம்மதுவின் பெயரை நாம் கூறும்போது, அதோடு கூட ஆசீர்வாதத்தையும் வேண்டுதல்களையும் நாம் சேர்த்து சொன்னால், "முஹம்மது உண்மையாகவே இறைவனின் தூதர்" என்று நாங்கள் (கிறிஸ்தவர்கள்) அங்கீகரித்தது போல் ஆகிவிடும். ஆக, பைபிளின் தெளிவாக வெளிப்பாடுகளின் படி, நாங்கள் முஹம்மதுவை நம்புவதில்லை, அவர் ஒரு நபி என்று நம்புவதில்லை.

கிறிஸ்தவனாகிய நான் உங்களிடம் வந்து, இனி "ஈஸா (இயேசு)" என்று நீங்கள் பயன்படுத்தும் போதெல்லாம் (கூறும் போதெல்லாம்) "ஆண்டவராகிய இயேசுக் கிறிஸ்து" என்று கூறுங்கள் என்றுச் சொன்னால் அது சரியாக உங்களுக்கு தென்படுமா? “இயேசுவை ஆண்டவர்" என்று அழைப்பது, அவர் பழைய ஏற்பாட்டின் சர்வ வல்லவரான தேவனை குறிப்பிடுவதாக இருக்கும். (அடோனய் = பழைய ஏற்பாட்டில் ஆண்டவர்).

இப்படி நீங்கள் இயேசு ஆண்டவர் என்று அழைத்தால், அது உங்கள் இஸ்லாமிய நம்பிக்கைக்கு எதிரானது என்பதை அறிந்தும், நீங்கள் இயேசுவை இப்படி அழைக்கத்தான் வேண்டும் என்று நான் உங்களுக்கு கட்டளையிட்டு நேரத்தை வீணடிக்கமுடியுமா? இருந்த போதிலும் வேதம் தெளிவாக கீழ்கண்டவிதமாக கூறுகிறது:

ரோமர் 10:9

என்னவென்றால், கர்த்தராகிய இயேசுவை நீ உன் வாயினாலே அறிக்கையிட்டு, தேவன் அவரை மரித்தோரிலிருந்து எழுப்பினாரென்று உன் இருதயத்திலே விசுவாசித்தால் இரட்சிக்கப்படுவாய்.

இந்த சந்தர்ப்பத்தில் ஒரு கேள்வியை உங்களிடம் கேட்கட்டும்: இன்று நீங்கள் இயேசுவை பின்பற்றுபவராக மாற விரும்புகிறீர்களா? இன்று நீங்கள் மரித்தால் எங்கு போவீர்கள்? நீங்கள் போகும் இடம் துன்பம் நிறைந்த இடமா? அல்லது இறைவனின் பிரசன்னம் இருக்கும் இடமா? இதில் எதை நீங்கள் தெரிந்தெடுக்கப் போகிறீர்கள்? எல்லா தீர்க்கதரிசிகள் சொன்ன சத்தியமாம் இயேசுக் கிறிஸ்து மீது நம்பிக்கை வைத்து, உங்கள் வாயினால் அவர் தான் இறைவன் என்று நம்புங்கள் என்று உங்களை நான் அழைக்கிறேன். நீங்கள் எடுக்கும் இந்த முடிவிற்காக ஒருபோதும் நீங்கள் மனம் வருந்தமாட்டீர்கள்.

இயேசு தாமாகவே சொன்ன இந்த வார்த்தைகளை கவனித்துப்பாருங்கள்:

யோவான் 5:24

என் வசனத்தைக் கேட்டு, என்னை அனுப்பினவரை விசுவாசிக்கிறவனுக்கு நித்தியஜீவன் உண்டு; அவன் ஆக்கினைத் தீர்ப்புக்குட்படாமல், மரணத்தைவிட்டு நீங்கி, ஜீவனுக்குட்பட்டிருக்கிறான் என்று மெய்யாகவே மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

உங்களுக்கு சமாதானம்

லாசரஸ்

முஹம்மதுவின் மீது "**சாந்தியை**" கூறும் இந்த வார்த்தைகளைக் குறித்து மேலும் அறிய, இந்த தொடுப்பை சொடுக்கவும்

ஆங்கில மூலம்: **Should Christians Use The Formula "PBUH"?**

மூலம்: http://www.answering-islam.org/tamil/emails/pbuh.html

# 4. முஸ்லிமிடம் கேட்க வேண்டிய கேள்விகள்

**மெயில் பெற்றுக்கொண்ட நாள்:** 24 ஏப்ரல் 2005

**பொருள்:** ஆய்வு செய்ய உதவி தேவை

முதலாவதாக, உங்களுடைய இந்த அருமையான தளத்திற்காக என் நன்றிகளை தெரிவித்துக்கொள்கிறேன். நான் பைபிள் கலாசாலையில் மாணவனாக இருக்கிறேன். உலக மதங்கள் பற்றிய பாடத்தை எடுத்துள்ளேன், இப்போது அதைப் பற்றிய ஒரு ஆய்வு செய்யவுள்ளேன். இஸ்லாம் பற்றி அதிகமாக நான் அறிந்துக்கொள்ள உங்களின் தளம் மிகவும் உதவியாக உள்ளது. இந்த தளத்தில் உள்ள கட்டுரைகளும், இதர தொடுப்புகளும் மிகவும் நன்றாக உள்ளது. உங்களுடைய அயராத உழைப்பிற்காகவும், பைபிள் சம்மந்தப்பட்ட பதில்களுக்காகவும் என் நன்றிகளை தெரிவித்துக்கொள்கிறேன்.

மேலே நான் குறிப்பிட்ட பாடத்திட்டத்தின் ஒரு பாகமாக, நான் ஒரு ஆய்வு செய்யவேண்டும். அதாவது, கிறிஸ்தவம் பற்றி முஸ்லிம்களின் தவறான கண்ணோட்டத்தை அவர்கள் மாற்றிக் கொள்ள அவர்களுக்கு உதவியாக இருப்பதற்கு, மூன்று சவால்களை அல்லது கேள்விகளை அவர்களிடம் கேட்கவேண்டும். உங்களிடம் நான் கேட்கும் உதவி என்னவென்றால்: ஒரு இஸ்லாமிய சகோதரர் அல்லது சகோதரியிடம் சுவிசேஷத்தைச் சொல்லிவிட்ட பிறகு, அவர்கள் ஒரு நல்ல முடிவை எடுக்கும் படி, அவர்களிடம் கேட்கவேண்டிய மூன்று முக்கியமான கேள்விகள் அல்லது சவால்கள் எவை? எனக்கு இருக்கின்ற குறைவான அறிவினால், நான் ஏதாவது தவறான கேள்விகள் கேட்டு, அவர்களை காயப்படுத்திவிடுவேனோ என்று எனக்கு பயமாக உள்ளது. எனவே உங்களிடம் உதவி கேட்கிறேன்.

இஸ்லாமியர்களிடம் கேட்கவேண்டிய மூன்று கேள்விகளை, எனக்கு நீங்கள் கொடுத்து உதவினால் மிகவும் நன்றாக இருக்கும், உங்களால் உதவமுடியுமா?

உங்கள் தளத்திற்காக மறுபடியும் என் நன்றிகளை தெரிவித்துக்கொள்கிறேன்.

இப்படிக்கு,

த....

---

**எங்களுடைய பதில்:**

அன்பான சகோதரர் அவர்களே,

உங்களுக்கு எங்கள் தளம் உதவியாக இருக்கிறது என்பதை அறிந்து மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறோம். அதாவது உங்கள் கேள்வி இது தானே: முஸ்லிம்கள் கிறிஸ்தவம் பற்றி கொண்டுள்ள தவறான மற்றும் எதிர்மறையான கருத்துக்களை அவர்கள் மறுபரிசீலனை செய்ய தூண்டும் படி, சிந்திக்க வைக்கும் படி, நாம் கேட்க வேண்டிய மூன்று கேள்விகள் என்னென்ன?

அனேகர் வேறு வகையான கேள்விகள் கேட்கும்படி உங்களுக்கு அறிவுரை சொல்லலாம். ஆனால், என்னைப் பொறுத்தமட்டில் நான் கீழ்கண்ட மூன்று கேள்விகளை கேட்க விரும்புவேன்.

1. பைபிள் திருத்தப்பட்டது என்ற இஸ்லாமிய குற்றச்சாட்டைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? அது யாரால், எப்போது நடந்தது என்று உங்களால் சரியாக கூறமுடியுமா?

இந்த கேள்வி மிகவும் முக்கியமான கேள்வியாகும். முஹம்மது குர்-ஆனை ஓதிக்காண்பித்த காலத்தில், பைபிள் திருத்தப்படவில்லை என்பது பற்றிய தெளிவான குர்-ஆன் வசனங்களை அவர் ஓதிக்காண்பித்தார். மேலும் பைபிள் திருத்தப்பட்டது என்று அவர் நம்பவில்லை என்பதை இதன் மூலமாக நாம் முஸ்லிம்களுக்கு தெளிவை உண்டாக்க முடியும். கிறிஸ்தவர்கள் தங்களிடம் உள்ள வேதத்தின் படி நடந்துக்கொள்ளவேண்டும் என்று குர்-ஆன் கிறிஸ்தவர்களுக்கு கட்டளையிடுகிறது. யோவான் ஸ்நானகனுக்கும், இயேசுவிற்கும் அல்லாஹ் தோராவை கற்றுக்கொடுத்தார் என்று குர்-ஆனில் வசனங்கள் உண்டு. குர்-ஆனின் இந்த வசனம் உண்மை என்று நாம் கருதினால், முதல் நூற்றாண்டில் தோரா கறைப்படுத்தப்படாமல் இருந்தது என்று அர்த்தமாகிறது. நம்மிடம் இன்று சவக்கடல் சுருள்கள் உள்ளன, அதோடு கூட யோவான் ஸ்நானகன் மற்றும் இயேசுவின் காலத்திற்கு 200 ஆண்டுகளுக்கு முன்பு மொழியாக்கம் செய்யப்பட்ட செப்டாஜிண்ட் என்ற சுருள்களும் உள்ளது. ஆகையால், உண்மைகளை சரி பார்த்து தெரிந்துகொள்ளவேண்டும் என்று ஆவல் உள்ளவர்களுக்கு இந்த விவரங்கள் உதவியாக இருக்கும். குர்-ஆன் சொல்லும் விவரங்களின் படியும், நம்மிடம் உள்ள கைப்பிரதி சுருள்கள் ஆதாரங்களின்படியும் பார்த்தால், பைபிள் கறைப்படுத்தப்படுவது என்பது முடியாத காரியமாகும். இப்படி அனேக தர்க்கரீதியான கேள்விகளை கேட்டுக்கொண்டே இருக்கலாம். மேலும் அதிகபடியான விவரங்களுக்கு கீழ்கண்ட கட்டுரைகளை படிக்கவும்:

**www.answering-islam.org/Bible/multi.html**

**www.answering-islam.org/Bible/Text/wijngaards.html**

**www.answering-islam.org/Bible/jrwhy.html**

எனக்கு பிடித்த இரண்டாவது கேள்வி "தேவன் மனிதனாக வந்தார்" என்பதைப் பற்றி முஸ்லிம்கள் கொண்டிருக்கும் தவறான கண்ணோட்டம் பற்றியதாகும். தேவன் தம்முடைய அன்பை காட்டும்படி, மனிதனாக வந்து, நமக்காக சிலுவையில் மரித்து உயிரோடு எழுந்த நிகழ்ச்சி, "இறைவனுடைய மேன்மைக்கு இழுக்கை உண்டாக்கும்" என்று முஸ்லிம்கள் கருதுகிறார்கள். இதைப் பற்றி நான் அவர்களிடம் கேட்க விரும்பும் இரண்டாவது கேள்வி இவ்விதமாக இருக்கிறது.

2. தத்துவ ரீதியாக கேட்டால் எது உயர்ந்தது? தன்னுடைய அன்பை மிகவும் உயர்ந்த வகையில் வெளிப்படுத்திய இறைவனுடைய செயலா (பைபிளின் தேவன்) ? (பார்க்க பிலிப்பியர் 2ம் அதிகாரம்) அல்லது தன்னுடைய கௌரவத்தை காத்துக்கொள்ள தன் அன்பை வெளிக்காட்டாத இறைவனா (அல்லாஹ்)?

இயேசுக் கிறிஸ்துவின் மனித அவதாரம் பற்றியும், அவரது தியாக பலி பற்றியும் நாம் முஸ்லிம்களின் கண்ணோட்டத்தில் பார்த்தால், இது ஒரு உபயோகமில்லாத ஒன்றாக தெரியும். ஆனால், இதையே நாம் சரியான கண்ணோட்டத்தில் பார்த்தால், இயேசுவின் தியாக பலியை நாம் மெச்சிக்கொள்ளாமல் இருக்கமுடியாது. இறைவன் உலகம் உண்டானது முதல் இதுவரை செய்த அனைத்து செயல்களைக்காட்டிலும், இதுவே மிகவும் மேன்மையான செயலாக இருக்கும். இறைவன் நம் மீது வைத்த அன்புக்காக எவ்வளவு பெரிய செயலை செய்துள்ளார் என்பதை முஸ்லிம்கள் காணுவார்களானால், அவர்களால் உண்மையான இறைவனை கண்டுக்கொள்ளமுடியும். பைபிளின் தேவனுக்கும், இஸ்லாமிய இறைவனுக்கும் இடையே இருக்கும் அதிமுக்கியமான வித்தியாசம், இந்த அன்பின் செயலில் தான் அடங்கியிருக்கிறது. இதைப் பற்றி மேலும் அறிய **இந்த பதிலை படிக்கவும்**, இதில் இரண்டு தகப்பன்மார்கள் பற்றி எழுதப்பட்டுள்ளது.

முஸ்லிம்களிடம் கேட்கவேண்டிய அடுத்த கேள்வி:

3. நீங்கள் பாவ சுபாவம் இல்லாமல் பிறந்தீர்கள் என்றுச் சொல்வீர்களானால், எத்தனை நாட்கள் இப்படி பாவம் செய்யாமல் இருப்பீர்கள்? பாவமில்லாமல் ஒரு வாரம் இருப்பீர்களா? அல்லது ஒரு நாள் பாவமில்லாமல் இருப்பீர்களா? நீங்கள் பிறந்தபோதே அடிப்படையிலேயே நல்ல சுபாவத்தோடு இருந்தால், ஏன் மீதமுள்ள நாட்கள் நல்லவர்களாக இருக்க அதிகமாக முயற்சி எடுக்கவேண்டும்? இயற்கையாகவே ஏன் நாம் பாவத்தின் பக்கமே சாய்கிறோம், நீதியின் பக்கம் அதிகமாக ஈர்க்கப்படுவதில்லை?

இந்தத் தலைப்பு பற்றி இக்கட்டுரையில் "**www.answering-islam.org/Intro/discussion.pdf**" தெளிவாக விளக்கப்பட்டுள்ளது.

நான்காவது கேள்வி:

நீங்கள் திறந்த மனதுடன் இறைவனிடம் "இறைவா! உன்னுடைய சத்தியத்தை நான் அறிய எனக்கு வழி காட்டுவாயாக. அந்த சத்தியம் இஸ்லாமில் இல்லாமல் பைபிளில் இருந்தாலும் சரி, எனக்கு வழி காட்டுவாயாக" என்று வேண்டுதல் செய்வீர்களா?

இந்த விவரங்கள் உங்களுக்கு உதவியாக இருக்கும் என்று நம்புகிறேன். முஸ்லிம்களை சிந்திக்கத்தூண்டுகின்ற வகையில் உங்கள் கேள்விகளை கேளுங்கள். இப்படி கேள்விகள் கேட்பதினால், முஸ்லிம்கள் துக்கப்படுவார்களோ என்று நீங்கள் அஞ்சத்தேவையில்லை. அவர்கள் எப்படி நம்மிடம் கேள்விகளை தைரியமாக கேட்கிறார்களோ அதே போல நாமும் கேட்கலாம். மலைமீது கட்டப்பட்ட பட்டணத்தை மறைக்கமுடியாது. எனவே, நம்முடைய கர்த்தராகிய இயேசுக் கிறிஸ்து பற்றிய இறைச் செய்தியை அவர்களுக்குத் தெரிவிக்க நாம் வெட்கப்படக்கூடாது. இவரைப் பற்றி அனேக தீர்க்கதரிசிகள் தீர்க்கதரிசனங்களாக அறிவித்துள்ளார்கள். இயேசுவின் மூலமாக நமக்கு இரட்சிப்பு கிடைத்துள்ளது, அதே போல, அவர் செய்துமுடித்த இரட்சிப்பு காரியத்தின் மீது நம்பிக்கை வைக்கின்ற அனைவரும் இரட்சிக்கப்படுவார்கள்.

மேலும், நாம் கேட்கும் சிந்திக்கத்தூண்டுகின்ற கேள்விகள் சில வேளைகளில் அவர்களுக்கு துக்கத்தை உண்டாக்கினாலும், அவைகளினால் அவர்கள் தூண்டப்பட்டு பிறகு ஆய்வு செய்து, இதன் மூலம் அவர்கள் சத்தியத்தை அறிந்து இரட்சிக்கப்பட அவைகள் உதவியாக இருக்கும்.

உங்களுக்கு வேறு ஏதாவது கேள்விகள் இருந்தால், எங்களுக்கு எழுத தயங்க வேண்டாம்.

இறைவன் உங்களை ஆசீர்வதிப்பாராக.

இப்படிக்கு,

லாசரஸ்

ஆங்கில மூலம்: **http://www.answering-islam.org/Emails/good_questions.htm**

மூலம்: http://www.answering-islam.org/tamil/emails/good_questions.html

## 5. அரபி மொழியை கட்டாயம் கற்றுக்கொள்ள வேண்டுமா?

**மெயில் பெற்றுக்கொண்ட தேதி:** 31 அக்டோபர் 2004

**பொருள்:** குர்-ஆனின் பிழைகள்.

குர்-ஆனை விமர்சிப்பதற்கு முன்பாக திரு கட்ஜ் அவர்கள் கட்டாயமாக அரபி மொழியை கற்றுக்கொள்வார் என்று நான் நம்புகிறேன். இந்த அறிவுரை குர்-ஆனுக்கு மட்டுமல்ல, அவருக்கு தெரியாத இதர மொழி புத்தகங்களுக்கும் பொருந்தும்.

---

எங்கள் பதில்:

அன்பானவரே,

உங்கள் பின்னூட்டத்திற்காக மிக்க நன்றி.

நான் உங்களிடம் சில கேள்விகளை கேட்கிறேன். இவைகள் உங்கள் விமர்சனத்திற்கும் பதிலாக அமையும்.

எந்த ஒரு மனிதனானாலும் சரி, குர்-ஆனை விமர்சிப்பதற்கு முன்பாக, கட்டாயமாக அவன் அரபி மொழியை கற்றுக்கொள்ள வேண்டும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? அல்லது இந்த சட்டத்தை எனக்கு மட்டுமே நீங்கள் முன்வைக்கிறீர்களா?

குர்-ஆனைப் பற்றி ஒரு ஆரோக்கியமான உரையாடலை, கேள்விகளை முன்வைக்கும் மனிதன், ஏன் அரபியை கற்றுக்கொள்ள வேண்டும்?

குர்-ஆனை விமர்சிப்பவர்களுக்கு நீங்கள் விதிக்கும் இந்த சட்டங்கள், பைபிளை விமர்சிப்பவர்களுக்கும் பொறுந்தும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? எனவே, நாம் இப்படி சொல்லலாமா? அதாவது பைபிளை விமர்சிக்க விரும்புகிறவர்கள் கட்டாயமாக, பைபிளின் மூல மொழிகளாகிய எபிரேயம், கிரேக்கம் போன்ற மொழிகளை கற்றுக்கொண்ட பிறகு தான் பைபிளைப் பற்றி பேசவேண்டும், கேள்வி கேட்கவேண்டும், அதுவரை அவர்களுக்கு பைபிளை விமர்சிக்க உரிமையில்லை.

நீங்கள் எனக்கு விதித்த சட்டத்தை பைபிளுக்கும் பொறுந்தும் என்று நீங்கள் நினைத்தால், இதுவரை பைபிளை வெளிப்படையாக விமர்சிக்கும் இஸ்லாமிய அறிஞர்களை நீங்கள் கேள்வி கேட்டதுண்டா? அவர்கள் செய்வது தவறு என்று அவர்களிடம் புகார் கூறியதுண்டா? அதாவது அஹமத் தீதத், ஜமால் பதாவி, ஷப்பீர் அலி, ஜாகிர் நாயக், ஹம்ஜா மாலிக் போன்றவர்கள் செய்வது தவறு என்று அவர்களை நீங்கள் கண்டித்ததுண்டா? இல்லை நான் இவர்களை கண்டிக்கவில்லை என்றுச் சொல்வீர்களானால், ஏன் கண்டிக்கவில்லை என்று எனக்கு விளக்கவும். அவர்களும் எபிரேயம், கிரேக்க மொழிகளை கற்றுக்கொள்ளாமல் தானே விமர்சிக்கிறார்கள்? [உமரின் வரிகள்: தமிழ் நாட்டின் இஸ்லாமிய அறிஞர்களாகிய பீ. ஜைனுல் ஆபிதீன் அவர்களும், இன்னும் இதர அறிஞர்களும் எபிரேயம், கிரேக்கம் போன்ற மொழிகளை கற்றுக்கொண்டு தான் பைபிளை விமர்சிக்கவேண்டும் என்று கிறிஸ்தவர்கள் எதிர்ப்பார்க்கலாம் அல்லவா?]

ஒருவேளை, குர்-ஆனுக்கு பொறுந்தும் இந்த சட்டமானது, பைபிளுக்கு பொறுந்தாது என்று நீங்கள் கருதினால், ஏன் இப்படி பொறுந்தாது என்று விவரமாக தயவு செய்து எனக்கு விளக்கவும்?

கடைசியாக, உங்களுடைய இந்த கோட்பாடு உங்களுக்கே ஒரு பிரச்சனையாக மாறுகிறது. அதாவது அரபி கிறிஸ்தவர்கள் குர்-ஆனை விமர்சிக்க நீங்கள் அங்கீகரிக்கிறீர்கள் என்று அர்த்தமாகிறது. இந்த கிறிஸ்தவர்களின் தாய் மொழி அரபியாக இருப்பதினாலும், அவர்கள் தாராளமாக குர்-ஆனை விமர்சிக்கலாம் என்று நாம் கருதலாம் இல்லையா? அரபி கிறிஸ்தவர்கள் குர்-ஆனை விமர்சிக்க நீங்கள் வரவேற்ப்பீர்கள் என்று நம்புலாமா?

குர்-ஆன் பற்றி நான் சொல்லும் விவரங்களில் விமர்சனங்களில் ஏதாவது தவறு இருக்குமானால் அதனை எனக்கு தெரிவிக்கவேண்டும். அதனை நான் சந்தோஷத்தோடு சரி செய்துக்கொள்வேன். என்னுடைய எந்த இணைய பக்கமானாலும் சரி, அதில் தவறு இருக்கிறது என்று நீங்கள் நிருபித்தால், அதனை சரி செய்துக்கொள்ள நான் ஆவலாக உள்ளேன்.

உங்கள் பதிலுக்காக காத்திருக்கிறேன்.

இப்படிக்கு

யோகன் கட்ஜ்

ஆங்கில மூலம்: **http://www.answering-islam.org/Emails/learn_arabic.htm**

மூலம்: http://www.answering-islam.org/tamil/emails/learn_arabic.html

## 6. இஸ்லாம் கிறிஸ்தவத்திற்கு முந்தியதா?

முன்னுரை:

ஒரு சகோதரர், ஆன்சரிங் இஸ்லாம் தள கட்டுரையை படித்து, கீழ்கண்ட கேள்வியை அனுப்பியிருந்தார்.

//NAME: Ramkumar

MESSAGE:

நபிகள் வாழ்ந்த காலம் கி.பி 570ம் ஆண்டு என கூறியுள்ளிர்கள். னால் இஸ்லாம் கிறிஸ்த்துவ மதத்திற்கு முன் தோன்றியது என்கிறார்களே? அவர் வாழ்ந்தகாலம் சரியானதா?//

இஸ்லாம் மற்றும் கிறிஸ்தவம் பற்றிய சில அடிப்படை வருடங்கள் பற்றி நாம் தெரிந்துக்கொண்டால், இஸ்லாமியர்கள் சொல்வதை சரியாக புரிந்துக்கொள்ளமுடியும். உண்மையில் இஸ்லாமியர்கள் சொல்வது தவறானதாகும். ஆனால், "இஸ்லாமியர்களின் நம்பிக்கை" என்ன என்பதை கருத்தில் கொண்டு பார்த்தோமானால், அவர்கள் சொல்வது உண்மை போல தெரியும். என்ன குழப்பமாக இருக்கின்றதா? கீழ்கண்ட விவரங்களை படியுங்கள்.

இந்த கட்டுரையில் சொல்லப்படும் விவரங்கள் பெரும்பான்மையாக எல்லாருக்கும் தெரிந்து இருந்தாலும், புதிதாக இஸ்லாம் மற்றும் கிறிஸ்தவம் பற்றி தெரிந்துக்கொள்பவர்களுக்கு வரும் சில கேள்விகளுக்கு சுருக்கமாக பதில் அளிப்பதாக அமையும்.

**இஸ்லாமின் கால அட்டவணை முக்கியமான நிகழ்வுகள் மட்டும்.** (மூலம்: http://en.wikipedia.org/wiki/Timeline_of_Muslim_history):

- கி.பி. 545: அப்துல்லாஹ் அவர்களின் பிறப்பு (முஹம்மதுவின் தந்தை)
- **கி.பி. 570: முஹம்மதுவின் பிறப்பு மற்றும் அப்துல்லாஹ் அவர்களின் மரணம்**
- கி.பி. 576: அமினா அவர்களின் மரணம் (முஹம்மதுவின் தாய்)
- கி.பி. 578: அப்துல் முத்தலிப் அவர்களின் மரணம் (முஹம்மதுவின் தாத்த)
- கி.பி. 583: முஹம்மதுவின் பெரியப்பா அபூ தாலிப் அவர்களுடன் முஹம்மது சிரியாவிற்கு பயணம் செய்கிறார்.
- கி.பி. 594: முஹம்மது கதிஜா என்ற பெண்மணிக்காக வியாபார விஷயமாக முஹம்மது சிரியா சென்று வருகிறார்.
- கி.பி. 595: முஹம்மது கதிஜா அவர்களை திருமணம் செய்துக்கொள்ளுதல்.
- **கி.பி. 610: ஹிரா என்ற குகையில் முதன் முதலாக தனக்கு குர்-ஆன் வசனங்கள் இறக்கப்பட்டது என்று அறிவித்தல். முஹம்மது ஒரு நபியாக கருதப்பட்ட ஆண்டு.**
- கி.பி. 619: முஹம்மதுவின் பெரியப்பா அபூ தாலிப் மற்றும் கதிஜா மரணித்தல்.
- கி.பி. 622: ஹிஜ்ரா – மதினாவிற்கு முஹம்மது தப்பி ஓடிய ஆண்டு – இஸ்லாமிய நாட்காட்டி ஆரம்பம்,
- கி.பி. 624: பத்ரூ யுத்தம், "Bani Qainuqa" என்ற யுத இனத்தை மதினாவிலிருந்து துரத்துதல்.
- கி.பி. 625: உஹுத் யுத்தம், "Banu Nadir" என்ற யூத இனத்தை மதினாவிலிருந்து துரத்துதல்.
- கி.பி. 627: கந்தக் யுத்தம் (Battle of the Trench). "Banu Quraiza" யூத இனத்தை கொன்று அனேகரை அடிமைகளாக எடுத்துக்கொள்ளுதல்.
- கி.பி. 628: ஹுதைபியா மற்றும் கய்பர் யுத்தம். அனேக அரசர்களுக்கு முஹம்மது கடிதம் எழுதினார்.
- கி.பி. 629: மக்காவிற்கு ஹஜ்ஜுக்காக முஹம்மது செல்லுதல், முடா யுத்தம்.
- கி.பி. 630: மக்காவை பிடித்தல், ஹுனயன் மற்றும் ஔதஸ் யுத்தம்.
- **கி.பி. 632: முஹம்மதுவின் மரணம்**

கி.பி. 570ல் முஹம்மது பிறக்கிறார், கி.பி. 610ல் தான் ஒரு தீர்க்கதரிசி என்று பிரகடனம் செய்கிறார். கி.பி. 632ல் மரணித்து விடுகிறார்.

இஸ்லாம் என்ற மார்க்கம் கால அட்டவணையின் படி, 610ல் முதன் முதலாக முஹம்மதுவால் முன்மொழியப்பட்டது. ஆக, கிறிஸ்தவம் வந்து 600 ஆண்டுகளுக்கு பிறகு இஸ்லாம் வந்தது. இயேசுவின் நேரடி சீடர்களின் மரணத்திற்கு பிறகு இஸ்லாம் என்பதை கண்டக்கிடால் (கி.பி. 100க்குள் அனைத்து நேரடி சீடர்களும் மரணித்துவிடுகின்றார்கள்), சீடர்களுக்கு பிறகு 500 ஆண்டுகளுக்கு பிறகு இஸ்லாம் வந்தது.

இது முதலாவது பதில், இது தான் சரியான பதிலும் கூட.

இப்போது, "முஸ்லிம்களின் நம்பிக்கையின்படி" இஸ்லாம் எப்போது தோன்றியது என்று அவர்கள் நம்புகிறார்கள் என்பதை கவனிப்போம்.

**இஸ்லாமின் நம்பிக்கையின் படி இஸ்லாமின் ஆரம்பம்:**

முஹம்மது தனது புதிய மார்க்கத்தை "யூதர்களோடு, கிறிஸ்தவர்களோடு" ஒட்ட வைத்துவிட்டார். இதன் அர்த்தம் என்ன?

பைபிளின் தேவன் தான் தன்னை அனுப்பினார் என்று முஹம்மது கூறினார். பழைய மற்றும் புதிய ஏற்பாட்டு தீர்க்கதரிசிகள் அனைவரின் வரிசையில் கடைசியாக தாம் வந்ததாக சுயபிரகடனம் செய்துக்கொண்டார்.

மேலும் ஆதாம் ஒரு முஸ்லிம் என்றும், ஆபிரகாம் ஒரு முஸ்லிம் என்றும் கூறி இஸ்லாமின் நாட்காட்டியை பழைய ஏற்பாட்டோடு ஒட்டவைத்துவிட்டார். இயேசு கூட தமக்கு முன்பாக வந்த தீர்க்கதரிசி என்று கூறிவிட்டார். மேலும் யோவான் ஸ்நானகன் மற்றும் இயேசுவின் தாயாரைப் பற்றியும் சில வசனங்களை குர்-ஆனில் சேர்த்துவிட்டார். கடைசியாக இயேசுவின் சீடர்களையும் விட்டுவைக்காமல் அவர்களையும் முஸ்லிமாக்கிவிட்டார். பைபிளின் முதல் ஐந்து ஆகமங்கள், சங்கீதம், நற்செய்தி நூல்கள் இவை அனைத்தையும் கொடுத்தவர் அல்லாஹ் என்று கூறிவிட்டார்.

மேற்சொன்னவைகள் தான் "தீர்க்கதரிசிகள் வேதங்கள்" பற்றிய இஸ்லாமிய நம்பிக்கையாகும். இப்போது நாம் வருடங்களை கணக்கில் கொள்ளாமல் மேற்கண்ட இஸ்லாமிய நம்பிக்கையை மட்டும் கருத்தில் கொண்டால்,

- அல்லாஹ் தான் யெகோவா தேவன்
- நம் தேவன் அனுப்பிய தீர்க்கதரிசிகளை அனுப்பியவர் 'அல்லாஹ்' ஆவார்.
- கடைசியாக, தேவன் (அதாவது அல்லாஹ்) இயேசுவிற்கு பின்பு முஹம்மதுவை அனுப்பினார்.

ஆக, இஸ்லாமியர்களின் லாஜிக்கின்படி, ஆதாம் ஒரு முஸ்லிம் என்றுச் சொன்னால், இஸ்லாம் எப்போது தோன்றியதாக நாம் கருதவேண்டும்? கிறிஸ்தவத்திற்கு முன்பு தோன்றியதாக கருத வேண்டும். இதைத் தான் முஸ்லிம்கள் "கிறிஸ்தவத்திற்கு முன்பு இஸ்லாம் தோன்றியது" என்று லாஜிக்காக சொல்கிறார்கள்.

ஆனால், உண்மையில், முஹம்மது ஒரு தீர்க்கதரிசி அல்ல, பைபிளின் படி அவர் ஒரு கள்ளத்தீர்க்கதரிசி. அவரை பைபிளின் யெகோவா தேவன் அனுப்பவில்லை. அல்லாஹ்வும் யெகோவா தேவனும் ஒருவரல்ல. அல்லாஹ் என்பவர் ஒரு அந்நிய கடவுள், அதாவது பழைய ஏற்பாட்டின் படி, அவரது பெயரைக் கூட நாம் நம் வாயால் சொல்லக்கூடாது. கிறிஸ்தவத்திற்கு பிறகு இன்னொரு புதிய மார்க்கம் வரவேண்டிய அவசியமில்லை.

யூத மற்றும் கிறிஸ்தவ அஸ்திபாரத்தின் மீது இஸ்லாம் என்ற மாளிகை கட்டப்பட்டுள்ளது. அந்த அஸ்திபாரத்தை நீக்கிவிட்டால், இஸ்லாம் என்ற ஒன்று இருக்கிறதா என்பதே பதில் இல்லாத கேள்வியாக நின்றுவிடும்.

முடிவுரையாக, கிறிஸ்தவத்திற்கு 600 ஆண்டுகளுக்கு பின்பு இஸ்லாம் தோன்றியது. அதை தோற்றுவித்தவர் முஹம்மது என்ற அரபியராவார். அவர் தன் மார்க்கத்தை யூத கிறிஸ்தவ வேதங்களோடு

ஒட்டவைத்துவிட்டார், ஆகையால் இஸ்லாம் யூத கிறிஸ்தவ மார்க்கத்திற்கு முந்தியது என்று இஸ்லாமியர்கள் தவறாக எல்லாருக்கும் சொல்லிக்கொண்டு இருக்கிறார்கள்.

மூலம்: **http://isakoran.blogspot.in/2012/12/blog-post_24.html**

**உமரின் ஈமெயில் பதில்கள்**

**உமரின் இதர கட்டுரைகள்**

மூலம்: http://www.answering-islam.org/tamil/authors/umar/email_replies/islam_before_christianity.html

**PDF தொகுத்த தேதி:** 15 ஏப்ரில் 2017